# ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம்

(தக்ஷிணாமூர்த்தியின் சின்முத்ரை, புன்சிரிப்பு, வீணை தரித்துக் கொண்டிக்கின்ற எழில், கடைக் கண் பார்வை அருள் இவற்றைப்பாடித் துதிக்கின்ற ஸ்தோத்ரம்.)

**உபாஸகானாம் யத$^{2}$ உபாஸனீயம்**
**உபாத்தவாஸம் வடசாகி$^{2}$ மூலே ।**
**தத்$^{2}$தா$^{4}$ம தா$^{3}$க்ஷிண்ய ஜுஷா ஸ்வமூர்த்யா**
**ஜாக$^{3}$ர்து சித்தே மம போ$^{3}$த$^{4}$ரூபம் ॥** 1

எது உபாஸகர்களுக்கு எப்பொழுதும் நினைக்கப்படவேண்டியதோ, எது ஆலமரத்தின் கீழ் இருக்கையை ஏற்படுத்திக் கொண்டதோ, அந்தப் பரம பதமான பொருள் விருப்பமோடு தெற்கு நோக்கிய தனது வடிவத்தால் எனது மனத்தில் அறிவின் தோற்றத்தை விழிப்புறச்செய்யட்டும்.

**அத்$^{3}$ராக்ஷம் அக்ஷண - த$^{3}$யா நிதா$^{4}$னம்**
**ஆசார்யம் ஆத்$^{3}$யம் வடமூல பா$^{4}$கே$^{3}$ ।**
**மௌனேன மந்த$^{3}$ ஸ்மிதபூ$^{4}$ஷிதேன**
**மஹர்ஷிலோகஸ்ய தமோ நுத$^{3}$ந்தம் ॥** 2

குறைவிலாத தயையின் இருப்பிடமாயும், புன்சிரிப்பினால் அணி செய்யப்பட்ட மௌனத்தினால் முனிவர்களின் கூட்டத்தினுடைய இருளை அழிப்பதாயும் உள்ள ஆதிகுருவை ஆலமரத்தினடியில் கண்டேன்.

**வித்$^{3}$ராவித அசேஷதமோக$^{3}$ணேன**
**முத்$^{3}$ராவிசேஷேண முஹுர்முனீனாம் ।**
**நிரஸ்ய மாயாம் த$^{3}$யயா வித$^{4}$த்தே**
**தே$^{3}$வோ மஹான் தத்த்வமஸீதி போ$^{3}$தம் ॥** 3

மிச்சமில்லாமல் இருட்கணங்களை விரட்டிய சிறந்த சின்முத்திரையினால் அடிக்கடி முனிவர்களுடைய மாயையை மாய்த்து, பெரியவனான இறைவன் "நீயே பிரம்மம்" என்ற மெய்யறிவைத் தயையோடு அளிக்கிறான்.

**அபாரகாருண்யஸுதா$^{4}$ தரங்கை$^{3}$:**
**அபாங்க$^{3}$ பாதைரவலோகயந்தம் ।**
**கடோ$^{2}$ர ஸம்ஸார நிதா$^{3}$க$^{4}$தப்தான்**
**முனீன் அஹம் நௌமி கு$^{3}$ரும் கு$^{3}$ரூணாம் ॥** 4

கடுமையான பிறவி என்னும் சூட்டினால் எரிக்கப்படுகின்ற முனிவர்களை கரைகாணாக் கருணையமுத அலைவீச்சுக்கள் கொண்ட கடைக்கண் பார்வைகளால் நோக்குகின்ற குருக்களுக்கெல்லாம் குருவானவரை நான் வணங்குகின்றேன்.

**மம ஆத்3ய தே3வோ வடமூலவாஸீ**
**க்ருபாவிசேஷாத் க்ருதஸந்நிதா4ன: ।**
**ஓம்காரரூபாம் உபதி3ச்ய வித்3யாம்**
**ஆவித்3யகத்4 வாந்தம் அபாகரோது ॥** 5

ஆலின் கீழ் எழுந்தருளியிருக்கின்ற என்னுடைய முதற்கடவுள், தன்னுடைய கருணைச் சிறப்பினாலே என் முன்வந்து, ஓங்காரமாகிய வித்யையை உபதேசித்து அறியாமை என்னும் இருளை அழிக்கட்டும்.

**கலாபி4: இந்தோ3ரிவ கல்பிதாங்க3ம்**
**முக்தாகலாபைரிவ பத்3த4மூர்த்திம் ।**
**ஆலோகயே தேசிகம் அப்ரமேயம்**
**அநாதி3 அவித்3யா திமிர ப்ரபா4தம் ॥** 6

சந்திரனின் கலைகளைப் போன்ற அங்கங்களை உடையவரும் முத்துச் சரத்தினால் பின்னப்பட்டது போன்ற உருவம் கொண்டவரும், அநாதியான அவித்யை என்னும் இருட்டுக்கு விடிவானவரும், அறிய முடியாதவருமான குருவைக் கண்கொண்டு பார்க்கிறேன்.

**ஸ்வத3 க்ஷஜானுஸ்தி2 தவாமபாத3ம்**
**பாதோ3த3ராலம்க்ருத யோக3 பட்டம் ।**
**அபஸ்ம்ருதேராஹித பாத3 மங்கே3**
**ப்ரணௌமி தேவம் ப்ரணிதா4னவந்தம் ॥** 7

தனது வலது துடையின் மேல் இடது பாதத்தை வைத்தவரும், பாம்பினால் அணி செய்யப்பட்ட யோக வஸ்த்ரத்தை அணிந்தவரும், அபஸ்மார புருஷனின் முதுகில் காலை ஊன்றியவரும், பூஜ்யருமான இறைவனை வணங்குகிறேன்.

**தத்த்வார்த2ம் அந்தேவஸதாம் ரிஷீணாம்**
**யுவாபி ய: ஸன் உபதேஷ்டுமீஷ்டே ।**
**ப்ரணௌமி தம் ப்ராக்தன புண்யஜாலை:**
**ஆசார்யம் ஆஸ்சர்யகுணாதிவாஸம் ॥** 8

சீடர்களான ரிஷிகளுக்கு; தான் இளையவனான போதிலும், உண்மையின் விளக்கத்தை உபதேசிக்க யார் முனைந்தாரோ, அந்த வியத்தகு குணங்களையுடைய ஆசார்யனை முன்பிறவியில் செய்த புண்ணியத்தின் பெருக்கினால் வணங்குகிறேன்.

**ஏகேன முத்ராம் பரசும் கரேண**
**கரேண ச அன்யேன ம்ருகா3ம் ததா4ன: |**
**ஸ்வஜானு வின்யஸ்தகர: புரஸ்தாத்**
**ஆசார்ய சூடா3மணி: ஆவிரஸ்து || 9**

ஒருகையினால் சின்முத்ரையும், மற்றொன்றினால் கோடலி ஆயுதமும் இன்னொரு கையினால் மானையும் தாங்கி, தனது துடையில் வைக்கப்பட்ட நான்காவது கையையுமுடைய ஆசார்ய சிரோன்மணி என் முன் தோன்றட்டும்.

**ஆலேபவந்தம் மத3னாங்க3 பூ4த்யா**
**சார்தூ3லக்ருத்த்யா பரிதா4ன வந்தம் |**
**ஆலோகயே கஞ்சன தே3சிகேந்த்3ரம்**
**அஞ்ஞான வாராகர பா3ட3 வாக்3னிம் || 10**

மன்மதனின் சாம்பலைப் பூசியவரும், புலித்தோலைப் போர்த்தியிருப்பவரும், மிகுந்த அஞ்ஞானமாகிய கடலுக்கு வடவாக்கினியானவருமான, ஒரு தேசிக முதல்வனைக் கண்முன் காண்கிறேன்.

**சாருஸ்மிதம் ஸோமகலாவதம்ஸம்**
**வீணாத4ரம் வ்யக்த ஜடா2கலாபம் |**
**உபாஸதே கேசன யோகினஸ் - த்வாம்**
**உபாத்த - நாதா3னுபவ - ப்ரமோத3ம் || 11**

இனிய புன்சிரிப்புடையவரும். சந்திரக்கலையைச் சூடியவரும் வீணையை ஏந்தியவரும், வரித்த செஞ்சடைக்கற்றையை, எழுந்த இன்னிசையில் திளைத்து மகிழ்ந்தவருமாக உம்மைச் சில யோகிகள் உபாஸிக்கிறார்கள்.

**உபாஸதே யம் முனய: சுகாத்3யா**
**நிராசிஷோ நிர்மமதாதிவாஸா: |**
**தம் தக்ஷிணாமூர்த்திதனும்**
**உபாஸ்மஹே மோஹமஹார்திசாந்த்யை || 12**

பற்றற்றவர்களும், அபிமானமற்றவர்களுமான சுகர் முதலிய முனிவர்கள் யாரை உபாஸிக்கிறார்களோ அந்த மஹேசனான தக்ஷிணாமூத்த ரூபத்தை, மோஹம் என்ற பெரிய துன்பத்திலிருந்து அமைதி பெறும் பொருட்டு வழி படுகிறேன்.

**காந்த்யா நிந்தி3த குந்த3 கந்த3லவபுர் -**
**ந்யக்3ரோத4 மூலே வஸன்**
**காருண்யாம்ருதவாரிபிர் முனிஜனம்**
**ஸம்பா4வயன் வீக்ஷிதை: |**
**மோஹத்4 வாந்த விபே4த3னம் விரசயன்**

**போ$^{3}$தே$^{4}$ன தத்தாத்$^{3}$ருசா**
**தேவஸ் - தத்த்வமஸீதி போ$^{3}$த$^{4}$யதுமாம்**
**முத்$^{3}$ராவதா பாணி நா ||** 13

ஒளியினாலே மல்லிகை மலரைப் பழிக்கும் திருமேனியோடு ஆலின் கீழே அமர்ந்து கருணையமுதவெள்ளமான பார்வைகளால் முனிவர் பெருமக்களை அருளிக்கொண்டு சின்முத்திரையோடு கூடிய கையினால் மோகம் எனும் இருட்டை 'நீ பிரம்மமே' என்ற மெய்யுபதேசத்தினால் பிளந்து கொண்டு விளங்கும் தேவன் என்னையும் அறிவிக்கட்டும்.

**அகௌ$^{3}$ர கா$^{3}$த்ரை அல்லாட நேத்ரை:**
**அசாந்தவேஷை : அபு$^{4}$ஜங்க$^{3}$பூ$^{4}$ஷை: |**
**அபோ$^{3}$த$^{4}$ முத்$^{3}$ரை: அனபாஸ்த நித்$^{3}$ரை:**
**அபூர்ண காமை: அமரைரலம் ந: ||** 14

வெண்மை ஒளியில்லாத உடலுடையவரும், நெற்றிக் கண்ணில்லாதவரும், சாந்தரூபமில்லாதவரும், பாம்பணியாதவரும், சின்முத்ரையில்லாதவரும், தூக்கத்தை ஒழிக்காதவரும், ஆசைகள் அறாதவருமான தேவர்களால் எங்களுக்கு ஒன்றும் ஆகவேண்டியதில்லை.

**தை$^{3}$வதானி கதி ஸந்தி ச அவனௌ**
**நைவ தானி மனஸோ மதானி மே |**
**தீ$^{3}$க்ஷிதம் ஜ$^{3}$ட$^{3}$ தி$^{4}$யாமநுக்$^{3}$ரஹே**
**த$^{3}$க்ஷிணாபி$^{4}$ முக$^{2}$ மேவவதைவதம் ||** 15

அவனியில் எத்தனையோ தெய்வங்கள். அவையெல்லாம் என் மனத்தால் நினைக்கப்படவில்லை. அறிவற்ற மூடர்களுக்கு அருள் செய்வதற்குக் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிற தெற்கு நோக்கியிருப்பதுதான் தெய்வம்.

**முதி$^{3}$தாய முக்$^{3}$த$^{4}$ சசி நாவதம்ஸினே**
**ப$^{4}$ஸிதாவலேப ரமணீய மூர்த்தயே |**
**ஜக$^{3}$தி3ந்த்$^{3}$ரஜால ரசனாபடீயஸே**
**மஹஸே நமோஸ்து வடமூலாஸினே ||** 16

மகிழ்வுற்றவரும், அழகிய சந்திரனைத் தலையில் சூடியவரும், விபூதி அணிந்த அழகான உருவமுள்ளவரும், இந்திரஜால வித்தையாக இந்த உலகத்தைப்படைக்கும் ஆற்றலுள்ளவரும் , பெரியவருமான அந்த ஆலமர் கடவுளுக்கு நமஸ்காரம்.

**வ்யாலம்பி3னீபி4: பரிதோ ஜடாபி4:**
**கலாவசேஷேண கலாத4ரேண ।**
**பச்யல் லலாடேன முகே2ந்து3னா ச**
**ப்ரகாசஸே சேதஸி நிர்மலானாம் ॥** 17

சுற்றும் தொங்குகின்ற சடைகளாலும், ஒருகலைமிஞ்சிய பிறைச் சந்திரனாலும், கண்ணையுடைய நெற்றியினாலும் முகசந்திரனாலும் தூய்மையான மனங்களில் விளங்குகிறாய்!

**உபாஸகானாம் த்வம் உமாஸஹாய:**
**பூர்ணேந்து3 பா4வம் ப்ரகடீகரோஷி ।**
**யத்3த்3ய தே த்3ர்சனமாத்ரதோ மே**
**த்3ரவத்யஹோர மானஸசந்த்3ரகாந்த: ॥** 18

உமையொருபாகனான நீ பக்தி செய்பவர்களுக்குச் சந்திரனின் தன்மையை வெளிப்படுத்துகின்றாய். அது உன்னை இன்று பார்த்த மாத்திரத்தில், ஆஹா! என் மனமாகிற சந்திரகாந்தக்கல்லை உருக்கிவிடுகிறது.

**யஸ்தே ப்ரஸன்னாம் அநுஸந்த3தா4னோ**
**மூர்த்திம் முதா3 முக்த4சசாங்க மௌலே: ।**
**ஐச்வர்யமாயுர் லப4தே ச வித்யாம்**
**அந்தே ச வேதாந்த மஹாரஹஸ்யம் ॥** 19

எவர்கள் அழகிய சந்திரனை முடியிலணிந்த ஒளியுள்ள உன்னுடைய மூர்த்தியை மகிழ்வோடு எப்போதும் சிந்திக்கிறார்களோ அவர்கள் செல்வத்தையும், ஆயுளையும், கல்வியையும், முடிவில் வேதாந்தமென்னும் பெரிய ரஹஸ்யத்தையும் அடைகிறார்கள்.

